ஸ்ரீ திரிபுரசுந்தரீ ஸமேத ஸ்ரீசந்திரமௌளீசுவராய நம:

# ஆர்யதர்மம்.

**कश्चित् पुमान् क्षिपति मां प्रतिरूक्षवाक्यै: श्रीमत् क्षमाभरमेणत्यमुदं प्रजामि।**
**शोकं व्रजामि पुनरेवमयं तपस्वी चारित्रत: स्खलितवानिति मन्निमित्तम् ॥**

"ஓர் மனிதன் கடுஞ்சொற்களால் என்னைப் பற்றி அதி க்ஷேபமாய்ப் பேசினபோதிலும் எங்கும் சிறப்பாய் விளங்கும் பொறுமையென்றும் பெரும் ஆபரணம் பூண்டு ஸந்தோஷத்தையே அடைந்து விடுகிறேன். ஆயினும் என்னிமித்தமாக இந்த மனிதன் தன்னுடைய நடத்தையிலிருந்தும் மாறிவிட்டானே என்று துக்கப்படுகிறேன்" உலகத்தில் பொதுவாகஸகல ஜனங்களுக்கும் பூர்வபாஷியாயிருத்தலும் மெதுவாகவும் மிருதுவாகவும் பேசுதலும் சிரித்த முகத்துடனிருத்தலும் கஷ்டப்படுவோரிடம்கருணை ராட்டுதலும்இயற்கையாகவேஅமைந்திருக்கவேண்டியநற்குணங்களாம் அந்த நற்குணங்களைப்பெற்றுபெரியோர்கள்பெரும்புகழையேஅடைந்தார்கள். காலம் வரவர கெடுதியை அடையும் பொழுது பிராணிகளுக்கும் குணங்கள் மாறி சுயநலமே பெரிது தன்னினத்தார் முன்னேற்றமடைவதே முக்கியமானது. மற்றவரெல்லாம் நம்மைக் கெடுப்பதற்காகவே தோன்றியிருப்பாராகையால் முன்னுக்கு வரக்கூடாது என்பதாதி பல விதமாகக் கெட்ட எண்ணங்கொண்டு ஒருவரை ஒருவர் காணும்பொழுது ஸௌம்யமான பார்வையில்லாமல் குரூரதிருஷ்டியாயிருப்பதும் கடுஞ்சொற்களைக் கொட்டுவதுமாகிய துர்குணங்களை அடைந்துவிடுகிறார்கள். இந்த ஸமயத்தில் விவேகமில்லாதவர்களானல் தாமும் திருப்பி அதே துர்குணங்களையுபயோகித்து த்வேஷப்பட்டுக்கொண்டு கஷ்டப்படுவார்கள். 'அவனால் நான் கெட்டேன்' என்று சொல்லிக்கொண்டு மேலுக்கு மேல் ஆத்திரப்பட்டு ஆபத்துக்கேஆளாவார்கள். ஸாதுக்களோவெனில் ஒருவன் அதிக்ஷேபமாகபேசும்பொழுதுதாமும்திருப்பிஅவசரப்பட்டுபேசிவிடமாட்டார்கள்.நிதானமாயிருந்துரோஷம்த்வேஷம் இவைகளுக்குச் சற்றேனும் மனதில்இடங்கொடுக்காமல் சிறந்த ஆபரணம்பூண்டவன்அசையாமலிருப்பது போல் பொருமையென்னும்பெருத்தஆபரணமணிந்து ஆசையாமலேயிருந்து ஆளப்படுவார்களேயன்றி ஆத்திரப்படமாட்டார்கள். ஆயினும் ஒருவிஷயத்திற்காக மாத்திரம் வியஸனப்படுவார்கள். இந்தப் பிராணி நற்குணம் பெற்று நன்றாயிருக்க வேண்டியிருக்க என்னைக் கண்டவுடனே நற்குணத்தினின்றும் நழுவிவிட்டானே அதற்கு நிமித்தமாக நாமே ஆய்விட்டோம் போலிருக்கிறதேயென்று தன்னைப்பற்றி வருத்தப்பட்டுக் கொள்வார்களேயன்றி மூக்குறியிலும் அவரிடம் கடுமையைக் காட்டவே மாட்டார்கள். எல்லோருமே இத்தகைய சிறந்த நற்குணத்தையே நாடி நன்மையை அடைவார்களாக. சுபம். பத்திராதிபர்.

# ஆர்யதர்மம்.

ஆங்கிரஸ-ஷு வைகாசி மீ௳ ௨

## ஆஸ்திக்யம்.

ஆஹாரம், வ்யவகாரம், சிற்றின்ப அனுபவம், இவை ஸம்பந்தமாக யாதொரு நிர்ப்பந்தமுமில்லாமல் ஒவ்வொருவரும் யதேச்சையாயிருந்துவரவேண்டுமென்ற மனப்பாங்கு நிறைந்தும், நவீன நாகரீகம் பொருந்தியதாயுமுள்ள இக்காலத்தில் தர்மாதி ஸம்பந்தமான நூல்களை ஆதரித்து பிரசாரம் செய்வதில் முயற்சியுள்ளவர்கள் மிகவும் ஸ்வல்பமே. மேனாட்டு ஸம்ப்ரதாயம், அர்த்த ஸம்பாதனம் ராஜ்யபரிபாலனமுறைகள் முதலியவைகளே கவனிக்கப்பட்டுவருகின்றன.

நமது பூர்வீக தர்மசாஸ்திரங்கள், அர்த்தசாஸ்திரங்கள் பூகோளம் கணிதம் வைத்யம் இது முதலான நூல்களின் ப்ரசாரமானது விதேசீயராஜாக்களின் பரிபாலனத்தால் வரவர தாழ்ந்த நிலையை அடைந்துவந்துகொண்டிருக்கிறது. ஆனால் முற்றிலும் ஞானத்தைப்பொறுத்துள்ள வேதாந்தசாஸ்திரவிசாரம்மட்டிலும் அங்கங்கே சிறிது ஏற்பட்டு பண்டிதர்களும் பாமரர்களும் மோக்ஷ சாஸ்திர நூல்களைப்படித்து ஒருவாறு ப்ரசாரத்திலிருக்குமாறு செய்துவந்திருக்கிறார்கள்.

நாம் தினேதினே உலகத்தில் அனுஷ்டிக்கவேண்டிய கருமங்கள் நியமங்கள் முதலிய விஷயத்தில் தர்மசாஸ்திரங்களுக்கு எவ்வளவு நெருங்கிய ஸம்பந்தமுளதோ அவ்வளவு மோக்ஷசாஸ்திரங்களுக்கில்லாமையால் விதேசிய நாகரீகம் வெகுகாலமாய் நமது ஜன்ம பூமியில் பரவி நமது பூர்வீக நாகரீகத்தைக் கெடுத்து வரினும், கேவலம் ஞானதாரமாயுள்ள வேதாந்த விசாரம் ஏதோ நடமாடிவந்துகொண்டிருக்கிறது. நிற்க



தற்கால வித்தியாசாலைகளில் கல்வி போதனுமுறையானது மிக்க வருந்தத்தக்க நிலையில் இருக்கிறது. இதற்கு மாணவர்களின் பெற்றோரும் உத்தரவாதியாவார்கள். திருஷ்டாந்தமாக விதேசியக் கல்வி பயிலும் 16-18-வயதுள்ள ஒரு ப்ராம்மணச் சிறுவனை "வேதம்" எவ்வளவு என்று கேட்டதற்கு அவன் பதில் சொல்லாமல் தபித்ததை என் கண்ணாக் கண்டிருக்கிறேன். பால்யமுதற்கொண்டே நவீன நாகரீகமானது பசுமரத்தாணி போல் மனதில் பதிந்துவிடுவதால் அன்னவர்களுக்கு நம் மத நூல்களில் தவறுதல்களே தோன்றும். குணத்தை க்ரஹித்து மகிழும் உத்தம சிந்தை உண்டாவதரிது.

கண்டதே காக்ஷி கொண்டதே கோலம் என்கிற மேனாட்டு நடைமுறையை நம்மவர்கள் கைப்பிடித்து அதனால் நமது சமய நூல்களை வெகுவாகப் பழித்து இழிவு கூறுகிறார்கள் என்பதை எல்லோரும் அறிவார்கள். இவர்களுக்குத் தகுந்த பதில் சொல்வார் பலபேர் இருந்தபோதிலும் உபேக்ஷையாயிருப்பதற்குக் காரணம் நாஸ்திகனிடத்தில் எது சொன்னாலும் ஏறு என்பதுதான். இதையே பெரியோர்கள்—

न परीक्षा न परीक्ष्यं नकर्ता कारणं न च।
न देवाः नर्षयः सिद्धाः कर्म कर्मफलं न च ॥
नास्तिक्यस्यास्तिनैवात्मा यदृच्छोपहतात्मनः ।
पातकेभ्यः परञ्चैतत्पातकं नास्तिकग्रहः ॥

"ஏதோ ஒரு ஸமயத்தில் கண்டதே பெரிதென மயங்கி புத்தியைக் கெடுத்துக்கொண்ட நாஸ்திகனுக்கு பரீக்ஷை, பரீக்ஷிக்கத்தக்கது, கர்த்தா, காரணம், தேவர்கள், ரிஷிகள், ஸித்தர்கள், கர்மம், அதன்பயன் ஆத்துமா இவொன்றுமில்லை. நாஸ்திகக் கொள்கை பாபத்திலும் மஹாபாபம்" என்றார்கள்.

எழுதுகிறவன் இல்லாமல் எப்படி சித்திரமுண்டாகாதோ ப்ராகாசம் பொருந்திய தங்கப் பதுமையானாலும் ஆட்டுகிறவனில்லாமல் எப்படி ஆடாதோ, வீணையில் மீட்டுகிறவன் இல்லாமல் எப்படி நாதமுண்டாகாதோ, அதேபோல் சராசரமாகிய எல்லாவற்றையும் உண்டுபண்ணி நடத்துகிற ஒருவன் இல்லாமல் அது எல்லாம் இருக்கமுடியாது என்று தெரிந்திருந்தபோதிலும் சிலர் தாம் எடுத்தகாரியத்தை முடித்தே தீருவது என்ற கோரிக்கையி

ஞல் வீண் அதர்ம ப்ரசாரம் செய்துவருகிறார்கள். மற்றும் சிலர் வீட்டுக் கூரையில் நெருப்புப் பற்றியெரிகிறது என்று சொன்ஞல், உள்ளே இருப்பவன் நான்பார்க்கவில்லை, நெருப்பு இங்கே வரவில்லை என்று மூட ஸமாதானம் செய்துகொண்டு இடத்தை விட்டு அசையாமல் இருப்பதுபோல் தோஷ காரியங்களைச்செய்து விட்டு உடனே அதனுடைய பலனை அனுபவிக்கவில்லையென்று கருதுகின்றனர். இவ்வித நிலைமை மிக்க வருந்தத்தக்கதே.

தற்காலத்தில் தேசாபிமானம் பாராட்டி தேசிய விஷயங்களில் கிளர்ச்சியுண்டாக்கி நமது தேசத்தின் க்ஷேமத்தையும் மேன்மையையும் ஸம்பாதிக்க முயன்றுவரும் ப்ரபுக்களும், கல்வியில் பெரியாரும், சங்கத்தார்களும் நமது பூர்வீக க்ரந்தங்கள் விஷயமாகத் தக்க ஊக்கங்கொண்டிருப்பதாகத் தெரியவில்லை. கல்வி ப்ரசாரம், உலகநடை, ஒழுங்குகள், நாகரிகம், ஆத்ம விசாரம் முதலியன சுதேச ஸம்பந்தமான ரீதிகளில் ஏற்பட்டு நாம் ஸ்வராஜ்யம் பெறவேண்டுமென்று பலவாறு வார்த்தையிஞலேமட்டும் பேசிவருகிறோம். அனுஷ்டானத்தைக் கவனித்தால், ஹிந்துக்களுக்கு முக்கியமாய் ஏற்பட்டுள்ள நாகரிகம், மஞேபாவம் முதலிய மேன்மையை நிலை நிறுத்தி, நாம் ஒரு பெரிய ஜாதியார் என்னும் பெருமையை மீண்டுமடைவதற்காதாரமாயுள்ள ஸாதனங்கள் தேடப்பட்டுவருவதாய்த் தோன்றவில்லை. இனியாவது இவ் விஷயத்தில் உத்ஸாஹமும், விடாமுயற்சியும் எடுத்துக்கொண்டு முன்ஞேர்களின் ஆசார வ்யவஹாரங்களைப் பாவச்செய்து அவைகளின்படி தாங்களும் நடந்து இதரர்களையும் நடத்திவைத்து, அதன்மூலம் ஏற்படும் சாச்வதமான க்ஷேமத்தையும், ஸௌக்யத்தையும் நம்மவருக்குத் தருவார்களென்று நம்புகிறோம்.

ஒவ்வொரு மதத்திலும், தத்துவ ஞானம், புராண இதிஹாஸாதி கதைகள், கர்ம முறைகள் இம் மூன்றும் ஒற்றுமையுள்ளவைகளாயிராமையால், மதங்கள் வேறுபடக் காரணமுண்டாயிருப்பதுடன், எனது மதம் உயர்ந்தது, உனது மதம் தாழ்ந்தது, என்ற வ்யவஹாரமும் (ஸமீபத்தில் அத்வைதத்தை அவைதிகம் என்றுசொன்ன உத்தராதி மடாதிபதியே இதற்குத் தக்க உதாஹரணம்) அதன்மூலமாயுள்ள ஆக்கிரகமும், வீண் கலகங்களும் ஏற்பட்டுவருகின்றன. அவரவர் தத்தம் மதக்கொள்கைகளைச்



சற்றேனும் ஸரிவரத் தெரிந்துகொண்டு, பிறமதத்தைத் தூஷிக்காமலிருத்தலும், சிலர் செய்யும் துர்போதனைக்கு உட்படாமலிருத்தலும், அவசியம். ஹிந்துக்கள் என்பவருக்கு ஹிந்துமதம் இத்தகையது என்கிற ஸ்தூலமான ஞானம்கூட ஏற்படாவிட்டால் இதைவிட வருந்தத்தக்க விஷயம் வேறு ஒன்றுமில்லை.

ஒவ்வொரு ஜாதியாருக்கும் இன்றியமையாத தேர்ச்சி ஒன்று உண்டு. இது மதத்துடன் ஸம்பந்தப்பட்டதாகவே இருக்கும் ஒரு ஜாதியாரின் நாகரீகத்தால் காலத்திற்கேற்றவாறு சிற்சில பேதங்கள் ஏற்படினும் மேற்கூறிய தேர்ச்சியின் மூலாதாரமாயுள்ள நோக்கங்களையும் ஒழுக்கங்களையும் நன்கறிந்து அவைகளைத் தழுவி நடந்து தேசத்தின் ஐசுவரியத்தையும், மேன்மையையும், ஸ்திரப்படுத்துவது நிஜமான தேசாபிமானம் பாராட்டுவோரின் முதற்கடமையாகும்.

இவ்வாறு நமது ஹிந்து சாஸ்திரங்களை நமது சிறுவர் சிறுமிகள் கற்றறிவதற்குத்தற்காலம் வேண்டிய சௌகர்யம் ஏற்படாவிட்டாலும், ஏதோ கல்வியின் சிலபாகங்களைக் கற்று யதேஷ்டமாய் உண்டு களிப்பதற்குச் சாதனமான இதரநாட்டு நாகரிகங்களையும், ஒழுக்கங்களையும் கைப்பற்றி நடக்கும் சிறுவர்கள் வயது முதிர்ந்து உலக வாழ்க்கையில் பிரவேசிக்குங்கால், அவர்களுக்கு நமது மதத்தில் அஞ்ஞானமாத்திரமில்லாமல் ஒருவித த்வேஷமும் பரிஹாஸ புத்தியும், ஏற்பட்டு அவர்கள் அதைப் பலவாறு தூஷித்துக் கூறுவதற்கும் இடமுண்டாகிறது. இவ்வித கேவல ஸ்திதி நீங்குவதற்கு நம் சிறுவர் சிறுமிகள் நம் மதத்தின் முக்ய கொள்கைகளையும் பெரியோர்களின் சரித்திரங்களையும், தெரிந்து கொள்ளல் அவசியம்.

ஒவ்வொரு மதத்திலும் சக்ஷுரிந்திரியத்துக்குப் புலப்படாத புண்யம், பாபம், ஸ்வர்க்கம், நரகம், மோக்ஷம் முதலிய விஷயங்களைப் பாமர ஜனங்கள் அறிந்து நடப்பதற்கு ஆதாரமாயுள்ள சாஸ்திரங்கள் பல உள. ஏதோ ஒரு பெரியார் ஆழ்ந்த ஸமாதியாலோ, வேறு எவ்விதமாகவோ தத்துவத்தை அறிந்து தமது சிஷ்யர்களின் மூலம் வெளியிட்டிருக்கிறார் என்பதும், அவர் செய்த உபதேசங்கள் அடங்கியுள்ள அக்கிரந்தங்களே மதசாஸ்திரங்கள் என்பதும், மதக்கொள்கைகளாம். ஆஞல் ஹிந்து

மதத்தின் எவ்வித ஞானத்திற்கும் வேதங்கள்தான் முக்கியாதார மென்றும், இவைகள் ஈசுவரனைப்போல் ஆத்யந்தமில்லாமல் சாசுவதமானவை என்றும், ரிஷிகள் தங்கள் தபோபலத்தினால் வேதங்களின் அர்த்தத்தை அறிந்து, ஸ்மிருதி இதிஹாஸபுராணாதி க்ரந்த ரூபமாய் ஜனங்கள் நன்கு அறியுமாறு வெளியிட்டிருக்கிறார்கள் என்பதும், எங்கும் நிறைந்து ப்ரகாசிக்கும் நிர்க்குணமான பரம புருஷன் லீலையாய் உலகத்தைப் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் மூன்றுவித கர்மம்செய்யும் பொது ப்ரம்மாதி மூர்த்தி ரூபங்களாய்ப் ப்ரகாசிக்கின்றார் என்பதும், ஆஸ்திகர்களான நம்மவர்களின் முக்யக்கொள்கை. ஆகையால் ஆஸ்திக்யத்தை அவலம்பித்து அதன் மூலமாய்த் தர்மங்களுக்குள் முக்கியமான आचारः प्रथमोधर्मः ஆசாரத்தைக் கடைபிடித்து ஆயுஸ், கீர்த்தி லக்ஷ்மீ விலாஸம், இவைகளை நாள்தோறும் வ்ருத்திசெய்து கொண்டு நித்ய ஸுகத்தை அடைவோமாக.

ஆசாரமும், ஒழுக்கமும், குன்றினால் ஆயுள்முதலிய யாவும் நாளுக்கு நாள் குன்றி நலிந்துபோகும். ஆகையால் நல்வழியாகிய ஆசார முறைமைப்படி நடந்தது. அந்த வர்ணத்திற்குத் தகுந்த ப்ரகாரம் கர்மானுஷ்டானங்களைச் செய்துவந்தால் ஸகல துன்பமும் தானே விலகும். ஆயுளும் வ்ருத்தியாகும். இல்லாவிட்டால் ஆயுள் குறைந்து அழியா நாகத்தில் எப்பொழுதும் தலை தூக்கமுடியாமல் தபிக்கும்படி நேரிடும்.

வேத விஹிதமான வர்ணாச்ரம தர்மத்தை விதி வழுவாது நடத்தி ஸர்வேச்வரனுடைய அநுக்ரஹத்துக்கு நாமெல்லோரும் பாத்ர பூதர்களாக ஆகுவோமாக.

பத்திராதிபர்.

---



# மத்வாவதாராத்புதலீலாரகஸ்யங்கள்

वक्तारमासाद्य यमेव नित्या सरस्वती स्वार्थसमन्विताऽसीत् ।
निरस्तदुस्तर्ककलङ्कपङ्का नमामि तं शङ्करमर्चिताङ्घ्रिम् ॥

"நித்யவாணியாகிய சுருதி எந்த பரமாசார்யானைத் தனக்கு வியாக்யாதாவாக அடைந்து துவைதாதி துர்மதஸ்தர்கள் தனக்கு அனபிமதமான விபரீதார்த்தங்களைக் கல்பிப்பதற்குப் பிரமாணமாகக் காட்டும் குதர்க்கங்களாகிய பங்கங்களால் பூசப்பட்டிருந்த தனது உடலை அலம்பிவிட்டுத் தனது அத்வைதமாகிய வாஸ்தவார்த்தத்துடன் கூடினதாக ஆனதோ அவ்வித மஹிமைவாய்ந்த பூஜ்யபாத ஜகத்குரு சங்கரபகவத்பாதரை நமஸ்கரிக்கின்றேன்"

நம்மால் எழுதப்பட்டுவரும் 'மத்வாவதாராத்புத லீலாரஹஸ்யங்கள்' என்னும் உபன்யாஸத்தில் இதுவரையில் (1) மத்வமதம் பிரச்சன்ன சார்வாகமதம். (2) மத்வமதம் அந்தரங்கத்தில் பௌத்தமதப் பற்றுள்ளது. (3) மத்வமதம் ஜைனமதத்தில் விசேஷ பக்திவாய்ந்தது. ஆகவே மத்வமதம் சார்வாக பௌத்த ஜைனமதத்ரய ஸம்பிண்டிதாத்ம ரூபம். (4) மத்வமதம் உலக விலக்ஷணமான சுருதி ஸ்மிருதி முதலிய பதினான்கு வித்யாஸ்தானங்களைத் தனக்குப் பிரமாணமாகக்கொண்டது. (5) மத்வமதம் ஆத்மப்பிரசம்ஸை பரநிந்தை என்கிற இரண்டு முக்ய குணங்களமைந்தது. (6) மத்வமதம் வைதிகப் பிராம்மண தைவமாகிய பரமேசுவரனையும் வாயில்வந்தபடியெல்லாம் தூஷிப்பது. (7) மத்வமதம் விகடகவிகளுக்கு வேடிக்கை காட்டுவதற்கு உபயோகப் படும்படியான மோக்ஷமஹிமை கூறுவது என்னும் ஏழு ரஹஸ்யங்கள் வெளியிடப்பட்டன. இன்னும் இதுமாதிரிப் பல ரஹஸ்யங்கள் உண்டு. அவைகளைஎழுதுவதானால் ஒருஜன்மம் போராது. ஆகையால் முக்யமான சில விஷயத்தைக் கூறி இந்த உபன்யாஸத்தை முடித்துக் கொள்கிறேன்.

மத்வமதத்தில் ஒரு சுருதிவாக்யத்திற்கு ஒரு அர்த்தந்தான் என்கிற நிர்பந்தமில்லை. பல அர்த்தங்கள் உண்டு. கர்மகாண்டவாக்யங்களுக்குக் கர்மபாகமாகவும் பிரும்ம பராமாகவும் அர்த்தங்கள் உண்டு. அவ்விதம் பலவிதமான அர்த்தம் கூறுவதிலும்

ஒரு வாக்யத்திற்கு ஒரு அர்த்தம் கூறும்பொழுது அந்த வாக்கியத்தில் எவ்வளவு பதங்கள் உபயோகப்பட்டனவோ அவ்வளவு பதங்களும் அதேவாக்கியத்திற்கு மற்றொரு அர்த்தம் கூறும்பொழுதும் உபயோகப்படவேண்டும் என்கிற நிர்ப்பந்தமில்லை. ஏகாக்ஷராதி நிகண்டுகளை வைத்துக்கொண்டுக் கூடியவரையில் எல்லாபதங்களுக்கும் அர்த்தம் சொல்லப் புறப்பட்டாலும் அதிலும் முடியாமல்போனுல் அப்பேற்பட்ட பதங்களை ஒதுக்கிவிட்டுப் பாக்கி பதங்களை வைத்துக்கொண்டே மற்றொரு அர்த்தம் கூறலாம் என்கிற விஷயம் நான்காவது ரஹஸ்யத்தில் கூறியுள்ளோம். அவ்விதம் ஏற்படும்பொழுது மத்வமதத்தில் नसुरांपिबेत् "சுரையைப் பானம் செய்யக்கூடாது" என்பது முதலிய நிஷேத வாக்யங்களுக்கு ஸுராபானம் செய்யக்கூடாது என்று ஓர் அர்த்தமும் அதே வாக்கியத்தில் 'ந' என்கிற நிஷேத பதத்தை விட்டுவிட்டு ஸுராபானம் செய்யவேண்டும் என்கிற மற்றொரு அர்த்தமும் ஏற்படும். ஸுராபானம் முதலிய கார்யங்கள் பிராணிகளுக்குராகத்தினுல் பிராப்தமானதால் அதை வேதம் கூறுவானேன் என்றால் ஸகல பிராணிகளும் அறிந்த துவைதத்தை நெல்லுக்குள் அரிசி இருக்கின்றது என்பதுபோல் வேதம் போதிப்பதாக ஒப்புக்கொள்ளும் துவைத மதத்தில் ஸுராபானம் முதலியராகப் பிராப்தமான விஷயங்களை வேதம் போதிக்குமென்று ஒப்புக் கொள்ளுவதில் என்ன தடை.

லோகப் பிராப்தமான விஷயங்களை வேதம் தாத்பர்யத்துடன் போதிப்பதில்லை என்று ஒருவாறு ஒப்புக்கொண்டாலும் ஜ்யோதிஷ்டோமாதி கர்மகாலங்களில் ஸுராபானம் முதலியதைச் செய்யவேண்டுமென்று உலகம் அறியாததால் அந்த காலங்களில் ஸுராபாளுதிகளைச் செய்யும்படி வேதம் போதிக்கின்றது என்று ஒப்புக்கொள்ளும்படி மத்வமதத்தில் நேரிடலாம். கர்மப் பிரகாணத்தைவிட்டுத் தனிப் பிரகாணமாக நிஷேத வாக்யங்களிருப்பதால் அந்த வாக்கியங்களுக்கு நிஷேத பதத்தைத்தள்ளிக் கர்மாங்கமாக ஸுராபாளுதிகளைப் போதிக்கும் தன்மையை எப்படி ஒப்புக்கொள்ளுகிறது என்றால் மத்வமதத்தில் தஹர வித்யை சாண்டில்ய வித்யை முதலிய வித்யைகள் தனித்தனிப் பிரகாணங்களில் இருந்தாலும் அந்தப் பிரகாணபேதங்களைக் கவனிக்காமல் எல்லாவற்றையும் ஏகவாக்யதைபண்ணி குணோபஸம்ஹாரம் செய்திருக்



கிறபடியால் அவ்விதமே नसुरांपिबेत् என்பது முதலிய வாக்யங்களையும் வேறு பிரகாணத்திலிருந்தாலும் அதைக் கவனிக்காமல் கர்மப் பிரகாணத்தோடு சேர்த்து நிஷேத பதத்தைத் தள்ளி ஸுராபான விதியைக் கர்மகாலத்தில் அந்த வாக்யம் போதிப்பதாக மத்வமதத்தில் ஒப்புக்கொள்வதில் என்ன தடை. ஆனுல் ஒரே வாக்யம் நிஷேத பதத்தைச் சேர்த்து ஸுராபானம் கூடாதென்றும் நிஷேத பதத்தைத்தள்ளி ஸுராபானம் செய்யவேண்டுமென்றும் போதித்தால் அதிராத்திரம் என்னும் ஸோமயாகத்தில் ஷோடசி கிரஹணம் செய்யக்கூடாதென்றும் அதைச் செய்ய வேண்டுமென்றும் போதிக்கும் இரண்டு வாக்யங்களால் ஷோடசி கிரஹணத்தில் விகல்ப்பம் ஆனுல் ஷோடசி கிரஹணத்தைச் செய்தால் பலம் அதிகம் என்று ஏற்படுவதுபோல் ஸுராபானத்தில் விகல்ப்பம் ஆனுல் ஸுராபானம் கர்மகாலத்தில் செய்தால் பலம் அதிகம் என்று மத்வமதத்தில் ஏற்படும். ஆகையால் மத்வமதத்தில் சுருதியின் அர்த்தம் போகிற ஒழுங்கைப் பாருங்கள். என்ன அத்புதம். இன்னொரு வேடிக்கை. மத்வமதத்தில் विष्णुमृतः विष्णुदुःखी विष्णुबद्धः। விஷ்ணு மரித்தார் விஷ்ணு துக்கமுடையவர் விஷ்ணு பத்தர் என்று சப்தப் பிரயோகம் செய்யலாம். ஆனுல் அந்தப்பிரயோகங்களுக்கு மத்வஸம்பிரதாயத்தில் அர்த்தம் வேறு. அதாவது விஷ்ணு அசுரர்களை மரிக்கும்படி செய்தார். விஷ்ணு பாபிகளைத் துக்கமடையும்படி செய்தார். விஷ்ணு ஜீவர்களைப் பந்தத்தை அடையும்படி செய்தார் என்று அர்த்தம். இவ்வித பிரயோகத்தின் காரணத்தை प्रवृत्तिनिमित्ततादधीन्यं என்று மத்வ ஸம்பிரதாயத்தில் கூறுகிறது. என்ன பிரயோகத்தின் அழகு பாருங்கள். இவ்விதம் எவ்வளவோ வேடிக்கைகள் எழுதி ஸாத்யப்படவில்லை. கைகள் வெலிக்கின்றன. இன்னும் நமது பரமாசார்யாளிடத்தில் பரம வித்வேஷத்தால் அவர்களைப்பற்றி கேவல நிந்தாரூபமான மணிமஞ்சரீ முதலிய அத்யாபாஸமான கிரந்தங்களை மத்வமதத்தில் படிக்கிறதுர், அந்தக் கிரந்தங்களைப் படித்து நன்றாக ஒப்பித்தமாத்திரத்தில் வேறு எவ்வித யோக்யதையுமில்லாமல் போனுலும் ஸம்பாவனைகளை மத்வ ஸபைகளில் வித்யார்த்திகள் பெறுவதும் உலகறிந்த விஷயம். இவ்விதம் ஓர் உலகப் பிரஸித்த மஹாபுருஷனை நிந்தித்து ஓர் கிரந்தம் இயற்றி அதைப்

படனபாடனங்களில் உபயோகப்படுத்திக்கொண்டிருப்பது கொஞ்சமாவது கண்யமுள்ள புருஷர்களுக்கு அழகாகுமா என்பதை ஆர்யதர்மாபிமானிகளே கவனியுங்கள்.

विप्रलंभप्रवृत्तानां विप्रलंभोऽपि युज्यते ।

"வஞ்சனை முதலிய கோணல் வழியில் போகின்றவர்களைத் திருத்தக் கோணல்வழியில் போவது உசிதமே" என்கிற நியாயத்தை அனுஸரித்து நாமும் 'மத்வாவதாராத்புத லீலாரஹஸ்யங்கள்' என்று ஆரம்பித்து மத்வமதத்தில் உள்ளபடியுள்ள ஆபாஸங்களை இதுகாறும் விளக்கினோம். மத்வமதக் கிரந்தங்களை உள்ளபடி பூராவாகப் பார்த்துப் பரிசீலனம்செய்தால் ஸ்மார்த்தர்களுடைய நிந்தையேபெரும்பாலும் அந்தக்கிரந்தங்களில் அகப்படும். வேறு ஒருவித ஸாரமும் அந்தக் கிரந்தங்களில் கிடைக்காது. இந்த விஷயங்கள் மத்வ கிரந்தங்களைப் பார்த்தவர்களுக்கு வெளிப்படை. மத்வர் மநுமுகன் முதலிய அஸுரர்களுடைய அவதாரம்என்பது முதலிய விஷயங்கள் ஸ்காந்தம், கேதாரகண்டம் முதலிய விடங்களில் உள்ளது. அந்த விஷயம் இதே ஆர்யதர்மத்தில் சென்ற வர்ஷம் "மதமும் மதஸ்தர்களும்" என்கிற தலையங்கத்தின் கீழ் பிருஹ்மஸ்ரீ எம். என். சுப்ரமண்யசாஸ்திரிகள் அவர்களால் நன்கு நிரூபிக்கப்பட்டிருக்கிறது. அத்வைத மதஸ்தர்கள் பிற மதஸ்தர்களை இவ்விதம நிந்திப்பது இதுவரையில் வழக்கமில்லை. மத்வ மதஸ்தர்களுக்கு மூலபுருஷனை மத்வர்முதல் இதேவழக்கம். அவ்வித ஸம்பிரதாயத்தை ஒட்டி ஸ்ரீமான் உத்தராதிடமடத்து சுவாமிகளவர்களும் கிருஷ்ணசார் அவர்களும் அத்வைதமதத்தை தூஷிக்க ஆரம்பித்தார்கள். அதற்காக நமக்கும் நமது ஸம்பிரதாயத்தில் இல்லாத புதுவழக்கம் ஏற்பட்டுவிட்டது. இனியாவது அவர்கள் இந்தக்கோணல் மார்க்கங்களில் போகாமல் நல்ல மார்க்கத்தில் போவார்களானால் நாமும் நமது ஸ்வபாவமான நல்ல மார்க்கத்திலேயே போகலாம். இல்லாதபக்ஷத்தில் நாமும் மீண்டும் இந்த மார்க்கத்திலேயே போகும்படி நேரிடும்.

அனாதி பரம்பரையாக வந்துகொண்டிருக்கும்பரம வைதிகமான அத்வைத மதத்தில் இது பௌத்தமதம் என்று பௌத்த மதத்திற்கும் அத்வைத மதத்திற்கும் உள்ள பலவிதமான விஷய பேதங்களை அறியாமல் அவ்விதம் அறிவதற்கும் சக்தியில்லாமல்



பிதற்றும் மத்வர் முதல் புதிதாகப் புதுமாதிரி சுருதிஸ்மிருதி முதலிய பிரமாணங்களைக்கொண்டு ஏற்படுத்தப்பட்ட நூதன துவைத மதஸ்தர்களின் விஷயத்தில் நாம் அனுதாபம் பாராட்ட வேண்டியதே தவிற கோபிப்பதற்கு இடமில்லை. இவ்வித துவைத மதஸ்தர்களும் மத்வருக்கு முன் நமது அனாதியான அத்வைத மதத்தில் உள்ளவர்களே. நமது அத்வைதானந்த ராஜ்யத்தை அடையும்பாக்யம் பெற்றவர்களே. அவ்விதமிருந்தும் ஏதோ கால வைபரீத்யத்தால் மத்வாச்சார்யரால் தனது வாகாடம்பரங்களால் மயக்கப்பட்டு மதாந்தரத்தை அடைந்துவிட்டார்கள்.

உயர்ந்த அத்வைதமதத்தில் துவேஷத்தையும் அடைந்தார்கள், அத்வைத மதத்தின் ஸம்பிரதாயங்கள் அதன் உயர்வு முதலியது தெரியாததால் அதை பௌத்தமதமென்று தூஷிக்கவும் புறப்பட்டுவிட்டார்கள். அதனால் சிரேயோ மார்க்கத்திலிருந்து விலகிப் பரிதாபமான நிலையில் இருக்கின்றார்கள். என்ன கஷ்டம். என்ன காலக்கொடுமை. இப்படிக் கெட்டுத் திண்டாடும் இவர்கள் விஷயத்தில் நமக்குக் கருணையில்லாமல் கோபமும் வந்துவிட்டது. இனிக் கோபங்கூடாது. அவர்களை நல்லவழியில் திருப்பிக்கொண்டுவரவேண்டும். மத்வமதத்தில் சிலருக்கு அதோகதிதான் என்பதுபோல் நமது மதத்திலில்லை. எல்லோருக்கும் கதியுண்டு. அவர்கள் அவ்விதம் வர தௌர்பாக்யத்தால் ஸம்மதிக்காமல்போனால் நாம் அவர்களை உபேக்ஷித்துவிடவேண்டுமேயல்லாது நிந்திக்கக்கூடாது. இவ் விஷயத்தையே

यस्तु कश्चित् क्षपकपादावनतशिरोबिंबस्तत्वदर्शनतन्निष्ठपरमहंसप्रद्वेषतीव्रवायु विक्षिप्तविवेकविज्ञानलव स्वपरपक्षगुणदोषविभागदूरीकृतविज्ञानो दुर्जनरमणीयां वाचं जल्पति सुगतविज्ञानवादसमानोयं वेदान्तवाद इति ससंप्रदायश्रवणपरिचयशून्यतया दर्शनविवेकमनवबुद्ध्यमानो नापवाद्यः। किन्तु शोचनीय इत्युपेक्षणीयो विद्वद्भिः ।

"எவ்வொருவன் ஜைனர்களுடைய சரணத்தில் வணங்கின சிரஸை உடையவனும் அத்வைதமாகிய தத்துவ தர்சனத்திலும் அதில் நிஷ்டையுடைய பரம ஹம்ஸாளிடத்திலும், ப்ரதுவேஷமாகிய பெருங் காற்றால் அடித்துக்கொண்டு போகப்பட்ட விவேக விஜ்

ஞானலேசத்தையுடையவனும், தனது மதம் பிறர் மதம் இவைகளில் உள்ள குணதோஷங்களைப் பிரித்து அறியபுத்தியில்லாதவனும் இருந்துகொண்டு அதனால் அத்வைதிகளுடைய வேதாந்தவாதம்,பௌத்தர்களுடைய விக்ஞானவாதம் சூன்யவாதம் இவைகளுக்கு ஸமானமாக வுள்ளது என்று ஊரூராக துர்ஜனங்களுக்கு ரமணீயமான வார்த்தைகளை உளருகின்றானே அவன் அறுதி குரு ஸம்பிரதாயமாக வேதாந்த சிரவணம் பண்ணிப் பரிசயமில்லாததால் வேதாந்த பௌத்தாதி தர்சனங்களுடைய பகுத்தறிவு இல்லாமல் இவ்விதம் உளருகிறானென்று வித்வான்களாகிய நாம் அவனை நிந்திக்கக்கூடாது. ஆனால் இவ்விதம் புத்தியில்லாமல் போய்விட்டானே என்று துக்கித்து உபேக்ஷை செய்யவேண்டியது" என்று விவரணம் என்கிறகிரந்தத்தில் ப்ரகாசாத்மஸ்ரீசரணாள் உபதேசித்திருக்கின்றார்கள். அந்த உபதேசத்தையே மஹோபதேசமாக எண்ணி இத்துடன் உபஸம்ஹரிக்கின்றோம்.

ஆகையால் ஸமரஸாபிமானிகளே நாம் இதரமதஸ்தர்களைப்
வ. போல் பிறமதத்திலுள்ளவர்களை நமது மதத்தில் இழுத்துக்
பி கொண்டு வருபவர்களன்று அந்தந்த மதஸ்தர்கள் அந்தந்தமதத்
நி திலேயே இருந்து கொண்டு பிறமதங்களைத் தூஷிக்காமல் காலக்கிரமத்தால் சிரேயஸ்ஸை அடையவேண்டுமென்கிற உதாரஎண்ணமுடையவர்களை, ஸூதஸம்ஹிதை முதலிய கிரந்தங்களில் ஸர்வமார்கப் பிராமாண்யம் என்னும் இடத்தில் சார்வாகமதம் முதல் ஔபநிஷதமான அத்வைதமதம் வரை எல்லா மார்க்கங்களும் அவரவர்களின் பலவிதமான அதிகாரத்திற்குத் தக்கவாறு படிப்படியாகப் பலவித ஸாதனங்களை உபதேசித்துக் கடைசியாக உயர்ந்த சிரேயஸ்ஸை அடையும்படி அதிகாரிகளைச் செய்வதால் பிரமாணங்களே ஒரு மார்க்கமும் அப்பிரமாணமன்று. அவனுடைய அதிகாரத்திற்குத் தக்கவாறு அதது பிரமாணமே என்று கூறப்பட்டிருக்கிறது. நமது மதத்தின்ஸாமரஸ்யத்தைப் பார்த்தீர்களா. இதரமதங்களுடைய பரநிந்தை செய்வதே தொழிலாயிருக்கும் ஸாமரஸ்யக்குறைவையும் பார்த்தீர்களா. ஆகையால் நாம் பிறமதம்போல் அனுவச்யமான பரநிந்தை செய்யாமலும் ஆத்மப் பிரசம்ஸை செய்து கொள்ளாமலும் நமது பரமாசார்யாளான ஸ்ரீமச்சங்கர பகவத்பாதாள் உபதேசித்த உயர்ந்த



அத்வைதமதத்திலேயே இருந்துகொண்டு அவர்களுடைய உபதேசஸாரங்களை அனுஷ்டானத்திற்குக் கொண்டு வந்து பரம சிரேயஸ்ஸை அடைவோமாக.

उद्धृत्य वेदपयसः कमलामिवाब्धे रालिङ्गिता खिल जगत्प्रभवैकमूर्तिम् ।
विद्यामशेषजगतां सुखदामदाद्यस्तं शङ्करं विमलभाष्यकृतं नमामि ॥

போலகம் சு. ஸ்ரீ ராமசாஸ்திரிகள்.

---

# ஸ்ரீ நடேசஸ்துதி.

नाथ त्वदीयकरुणामवलंब्य पद्या -
न्यानन्दसान्द्रकलितानिमनोहराणि ।
तस्मान्नटेश कलयेयुरमन्दमोदं
मद्वाञ्छितं च घटयेयुरमर्त्यनाथ ॥११९॥

ஓ! நாதா!! ஓ! நடேசா!! உம்முடைய கருணையே சகாயம் செய்து மநோகரங்களான உம்முடைய ஸ்தோத்ரபத்யங்கள் மிகுந்த ஸந்தோஷத்தினாலே செய்யப்பட்டன. ஓ! தேவநாயகா ஆகையால் அதிக ஸந்தோஷத்தை உண்டுபண்ணும் என்னுடைய இஷ்டத்தையும் பூர்த்திசெய்யும். (119)

नाथ त्वदीयचरणांबुजयोर्मखीन्द्रैः
संपूजितानि कुसुमानि लसन्ति नित्यम् ।
तद्वन्महेश नटनाथ मदीयपद्या-
न्याभान्तु नम्रचरणे शरणे नतानाम् ॥१२०॥

ஓ! நாதா!! ஓ! மகேச்வரா!! ஓ! நடநாயகா!! உம்முடைய சரணகமலங்களில் தீக்ஷித சிரேஷ்டர்களாலே பூஜிக்கப்பட்ட புஷ்பங்கள் நித்யம் எப்படி ப்ரகாசிக்கின்றனவோ அதுபோல் என்னுடைய ஸ்தோத்திரங்கள் வணங்கினவர்களை ரக்ஷிப்பதான உம்முடைய குஞ்சித சரணத்தில் பிரகாசிக்கட்டும். (120

सन्धार्य वाह्निमपि वामकरेण सन्धां
भक्तावने नटपतिर्य इहातनोति ।
तेन ह्यपारकरुणानिधिना विनाऽन्यत्
तत्व न वेद्मि जनिमार्गनिरासदक्षम् ॥१२१॥

இவ் வுலகில் யாதொரு நடேசமூர்த்தியானவர் இடது கரத்தில் அக்னியைத் தரித்துக்கொண்டும், பக்தர்களை ரக்ஷிப்பதில் பிரதிக்ஞை செய்கின்றாரோ, அந்த கருணாநிதியைக்காட்டிலும் ஸம்ஸார மார்க்கத்தை விலக்குவதில் ஸமர்த்தமான வேறான தத்வார்த்தத்தை நான் அறியவில்லை. (121)

श्रीमन्नटेश विनुतौ गुणलेशगन्धः
नास्त्येव किन्तु नटनायकनामगन्धः ।
तस्मान्नटेश चरणांबुजभाक्तयुक्तैः
सन्द्दश्यतां नुतिरियं कृपया सुधीन्द्रैः ॥१२२॥

ஓ! நடேசா! இந்த ஸ்துதியில் குணலேசத்தினுடைய வாஸனை இல்லாவிட்டாலும் நடேச நாமவாஸனையானது இருப்பதால் நடேச சரண பக்திமான்களான பண்டித சிரேஷ்டர்கள் தயையினாலே இந்த ஸ்துதியைப்பார்க்கவேணும். (122)

श्रीमन्नटेशविनुतिं वदतीह भक्त्या
तत्सन्निधावनुदिनं मनुजः प्रशान्तः ।
सोयं लभेतकृपया भुविचन्द्रमौले -
र्ह्यानवद्यमतिपुत्रधनानि धन्यः ॥१२३॥

ஓ! நடேச!! உம்முடைய ஸந்நிதியில் எந்த புருஷன் சாந்தனாக இருந்துகொண்டு பக்தியோடு உம்முடைய ஸ்தோத்திரத்தைச் சொல்லுகின்றானே அவன் உம்முடைய கிருபையினால் பூமியில் நல் புத்தியையும் புத்திரர்களையும் ஸம்பத்துக்களையும் அடைகின்றான். (123)

मदीयनुत्यानृत्तेशः सन्तुष्यतु कृपानिधिः ।
नुतावस्यां बुधेन्द्राश्च किरन्तु करुणादृशम् ॥१२४॥

கருணாநிதியான நடேசமூர்த்தி! என்னுடைய ஸ்தோத்திரத்தினாலேஎன்னுடைய ஸ்தோத்திரத்தினாலே ஸந்தோஷத்தை அடைய



வேணும். பண்டிதர்களும் இந்த ஸ்துதியால் கருணாதிருஷ்டியை இறைக்கவேணும். (124)

श्रीमद्धेमसभानाथ कृपयैव विनिर्मिता
सारल्यगुणयुक्तेयं नुतिर्जयतु सन्ततम् ॥१२५॥

ஓ! கநகஸபாநாயகா!! உம்முடைய கிருபையினாலேயே செய்யப்பட்ட ஸரஸ குணத்தோடுகூடிய இந்த ஸ்துதியானது எப்பொழுதும் பிரகாசிக்கட்டும். (125)

नटपति पदपद्मध्यानसत्कान्तरङ्गः
हरिहरबुधवाणीलब्धविद्यानुषङ्गः ।
मखिवरकुलजातो दीक्षितस्तत्वसङ्गः
तनुमपि नुति मेता मातनोद्रामलिङ्गः ॥१२६॥

நடேச! திவ்ய சரணத்தைத் தியானம் செய்கின்ற அந்தரங்கத்தை உடையவரும், ஹரிஹர பண்டித சிரேஷ்டர்களிடத்தில் அப்யஸிக்கப்பட்ட வித்யா ஸம்பந்தத்தை உடையவரும் மகி சிரேஷ்டர்களுடைய வம்சத்தில் ஜநித்தவரும் தத்வார்த்தத்தைத் தியானம் செய்கின்றவருமான ராமலிங்க தீக்ஷிதர் அல்ப்பமாயிருந்தபோதிலும் இந்த ஸ்தோத்திரத்தைச் செய்தார். இந்த ஸ்துதிகர்த்தர்களுக்கும் எனக்கும் ஆசார்யர்களான மஹாமஹோபாத்யாய ஹரிஹர சாஸ்திரிகளென்ற மகான்கள் மதுரை சமீபமுள்ள திருக்கோஷ்டியூரில் ஜனித்தவர்கள். அவ்விடத்திலும் கோவிலூரிலும் தர்க்கவ்யாகரண சாஸ்திரங்களையும் யஜுர்வேதாத்யனங்களையும் பூர்ணமாய்ச் செய்தார்கள். பிந்தி ராஜமன்னார்குடியில் சிவாம்ச பூதர்களான ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதவம்ச திலகர்களான சத்வித்யா விலாஸம், ந்யாயேந்துசேகரம் முதலான உத்தம க்ரந்த கர்த்தர்களான மஹாமஹோபாத்யாய தியாகராஜ சாஸ்திரிகள் என்ற ஸ்ரீநடராஜபக்த சிரோமணிகளான ராஜு சாஸ்திரிகளிடம் வேதாந்த மீமாம்ஸா சாஸ்திரங்களைப் பூர்ணமாய் அப்யஸித்தவர்கள். உயர்ந்த குருபக்தியும்ஸ்ரீமந் நடராஜ பக்தியுமுடையவர்கள். சிதம்பரம் மெ. செ. வித்யாசாலையில் சுமார் 25-வர்ஷகாலம் அத்யாபகர்களாயிருந்து அனேக வித்யார்த்திகள் மூலமாய் சாஸ்திர ப்ரசாரம் செய்தவர்கள். வைதிக கர்மானுஷ்டானத்தில் மிகவும் சிரத்தையுடையவர்கள். கும்பகோணம் காளகஸ்தி சிதம்பரம்

முதலான ஸ்தலங்களில் நடந்த அத்வைத சபைகளில் ப்ரதான பரீக்ஷகர்களாக இருந்தார்கள். மஹிசூர் சமஸ்தானத்தில் ப்ரதான தர்மாதிகார ஸ்தானத்தை அலங்கரித்தார்கள். ஷை வேதாந்தோத்தம வாத க்ரந்தமான நியாயேந்துசேகர உத்தரபாகமியற்றியவர்கள், ஷை சாஸ்திரிகள் அவர்களிடத்தில் ராமலிங்க தீக்ஷிதர் சுமார் 14-வயஸ் தொடங்கி 28-வயதுவரை காவ்ய நாடகாலங்கார சாகித்ய கிரந்தங்களையும் வியாகரணம், தர்க்கம், வேதாந்த சாஸ்திரங்களையும் பூர்ணமாய் அப்பியஸித்து ஷை பாடசாலையில் சாஸ்திரிகள் அவர்களுக்கு உதவியாகப் பாடப்ரவசனஞ்செய்தவர்கள் காளஹஸ்தி சிதம்பரம் முதலான வேதாந்த சபைகளில் முதன்மையாகத் தேறினவர்கள். மிக குணவந்தர்கள். (126)

सहस्रपञ्चकेऽतीते विंशेऽब्दे विनुतिः कलेः ।
सिद्धार्थौ मासि कन्याख्ये दशम्यामीश्वरेऽर्पिता ॥१२७॥

கலிவருஷம் ஐயாயிரத்து இருபதாவது வருஷத்தில் சித்தார்த்தி வருஷம் புரட்டாசி மாதம் தசமி திதியில் இந்த ஸ்துதியானது ஈச்வரனிடத்தில் அர்ப்பணம் செய்யப்பட்டது. (127)

वसुन्धरावलयविख्यातवैभवविभूषित वैराजहृन्मध्यविराजमान श्रीविश्वनाथनटनाथ नित्यानन्दनटनाधार चिदंबरपुरवराभिजनेन त्रिसहस्रद्विजेन्द्रमखीन्द्रवंशसमुत्पन्नेन श्रीमन्नटेशचरणारविन्दचञ्चरीकायमाणमानस सत्कर्मानुष्ठाननिरत श्रीमन्मीनाक्षिनाथविद्वन्मखीन्द्रात्मजेन शिवकामसुन्दरी गर्भसंभूतेन श्रीरामलिङ्गदीक्षितेन प्रणीतः
श्रीमन्नटेशस्तवः संपूर्णः ॥

பூமண்டலத்தில் பிரஸித்திபெற்ற மகிமையால் அலங்கரிக்கப்பட்டதும், விராட் புருஷனுடைய ஹிருதய மத்யஸ்தானத்தில் பிரகாசிக்கின்றதும், அகில ப்ரபஞ்ச நாயகரான ஸ்ரீமந் நடராயகருடைய நித்யானந்த நர்த்தனத்துக்கு ஆதார பூதமாயும் உள்ள சிதம்பர திவ்ய க்ஷேத்திரத்தை ஜன்மபூமியாக உடையவரும், திரு ஸகஸ்ர திவிஜ சிரேஷ்டர்களான தீக்ஷித வம்சத்தில் ஜனித்தவரும், ஸ்ரீநடேச திவ்ய சரணத்தை ஸதா தியானம் செய்கின்றவரும், ஸத்கர்மானுஷ்டானத்தில் நிரதர்களான மீனாக்ஷிநாத தீக்ஷிதர்களுடைய புத்திரரும், சிவகாம ஸுந்தரியின் கர்ப்பத்தில் ஜனித்தவருமான ஸ்ரீராமலிங்க தீக்ஷிதராலே செய்யப்பட்ட ஸ்ரீநடேசஸ்தவம் முற்றிற்று.

ஸ்ரீ சித்ஸபேசாயமங்களம்.

ராஜா சோமசேகர தீக்ஷிதர்.

---



## மனுஸ்மிருதி அத்தியாயம் 2
# சில வசனங்கள்.

1. பிறர் செய்த அவமதிப்பினால் வருத்தமடையாதவன் சுகமாய் தூங்குவான். சுகமாய் விழித்துக் கொள்வான். எழுந்து மனிதர்களுடன் சஞ்சரித்து சுகமாய் தன் கார்யத்தையும் செய்வான். (பிறர் செய்த அவமானத்தைப் பற்றி நினைக்கிறவனுக்கு எப்படித் தூக்கம் வரும். அவன் எப்படி எழுந்து சுகமாய் வேலை செய்வான்.) அவமானம் செய்தவனே தான் செய்த பாபத்தினால் நாசம் அடைவான்.

2. மேற்சொல்லியபடி ஜாதகர்மம் முதல் உபநயநபர்யந்தம் உள்ள ஸம்ஸ்காரங்களையடைந்த த்விஜன் குருகுலவாஸம் செய்து காலக்கிரமத்தில் வேதாத்யயனமாகிற தபஸ்ஸின் பயனை நிச்சயமாயடைகிறான்.

3. வெவ்வேறு சாஸ்திரத்தில் சொல்லிய விதிப்படி நியமங்களை அனுஷ்டித்து ஒவ்வொரு த்விஜனும் உபநிஷத்துகள் உள்பட வேதத்தை ஸாங்கோபாங்கம் படித்துத் தெரிந்துகொள்ள வேண்டும்.

4. தபஸ் செய்ய விருப்பமுள்ள த்விஜன் எப்பொழுதும் வேதம் ஓதவேண்டும். இவ்வுலகில் வேதாத்யயனமே த்விஜனுக்கு மேலான தபஸ் என்று பெரியோர்கள் கூறுகிறார்கள்.

5. பிரம்மசாரி நியமத்திற்கு விரோதமாய் புஷ்பமாலையணிந்தாகிலும் சக்திக்குத் தக்கபடி ஒவ்வொரு நாளும் வேதமோ

னும் த்விஜன் (சிரஸ்முதல் நகம்வரை) பூர்ணமாய் மேலான தபஸ் ஸைச் செய்கிறதாகவே பெரியோர்களின் கொள்கை.

6. வேதமோதாமல் வேறுவித்யை கற்கிறவன் உயிரோடு இருக்கிறபோதே சூத்ரனுவான். அப்படியே அவன் சந்ததிகளும் சூத்ரர்களாவார்கள்.

7. வேதவசனப்படி த்விஜனுக்கு தாயிடமிருந்து உத்பத்தி முதற்பிறப்பு. முஞ்சப்புல்கட்டி உபநயனம் செய்வது இரண்டாம் பிறப்பு. ஜயோதிஷ்டோமாதி யஞ்ஞம் செய்ய தீக்ஷைகொள்ளவது மூன்றும் பிறப்பு.

8. மௌஞ்சிகட்டிய வேதாத்யனத்திற்கு யோக்யமான உபயன பிறப்பில் த்விஜனுக்கு தாய் காயத்ரீ, தகப்பன் ஆசாரியன் என்று சொல்லுவார்கள்.

9. வேதம் கற்பிப்பதால் ஆசாரியனைப் பிதா என்று சொல்லுகிறார்கள். மௌஞ்சிகட்டிய உபநயனத்திற்கு முன் ச்ருதி, ஸ்மிருதியில் சொல்லும் எந்த கர்மாவுக்கும் யோக்யதை உண்டாகாது. இப்படிப் பெரிய யோக்யதையை உண்டுபண்ணி உபகரிக்கும் ஆசாரியனைத் தகப்பன் என்று ஏன் சொல்லக்கூடாது.

10. உபநனமாகாதவன் ச்ராத்த மந்திரங்களைத்தவிர வேறு வேதமந்திரங்களை உச்சரிக்கக்கூடாது. ஏனென்றால் வேதமோதும் யோக்யதையைக் கொடுக்கும் உபநயனத்திற்கு முன் அவன் சூத்ரனுக்கு ஒப்பானவன்.

R. ஸ்வாமிநாதய்யர்.

---

## ஆங்கிரஸ வருஷத்திய உபாகர்ம நிர்ணயம்-

நாம் நமது வர்ணுசிரம தர்மத்தைக் காப்பாற்றுமல் உதாசீனமாயிருந்துகொண்டு வருகிறோம். இந்த உதாசீனத்தின் பலனுக நம் சமூகத்துக்கும் ராஜ்யத்துக்கும் பல கெடுதிகள் வந்துவிட்டன, வந்துகொண்டிருக்கின்றன- உதரபோஷணேபாயத்திற்கு ஏற்பட்டிருக்கிற சிரமத்தாலும் ஸஹவாஸ தோஷத்தாலும் நமது ஸமூகஸ்வரூபம் மாறுபட்டுவருகிற இந்நாளில் பஞ்சாங்கங்களும் பலவாருய் ஏற்பட்டு ஜனங்களுக்குள்ள ஸ்வல்ப சிரத்தையையும் கெடுக்கின்றன. ஏதாவது ஒரு பஞ்சாங்கப்படி உபாகர்மாவை அனுஷ்டிப்பது என்பது மனதுக்குத் திருப்தியைக் கொடுப்பது தவிர சாஸ்திரப்படி அனுஷ்டித்ததாக ஆகமாட்டாது. அனுஷ்டானத்துக்குள்ள பலனைக் கொடுக்காததுமன்னியில் விபரீத பலனேற்படுமென்றும் தெரிகிறது. தோஷமுள்ள காலத்தில் உபாகர்மம் செய்வதிலிருந்து ராஜ்யத்திலுள்ள எல்லா த்விஜாதிகளுக்குமே துக்கம், சோகம் வியாதி முதலியவைகள் சம்பவிக்குமென்று நிர்ணயஸிந்துவில் சொல்லப்படுகிறது. ஆகையால் தோஷயுக்தமான காலத்தில் உபாகரணம் செய்வதைவிட செய்யாமலிருப்பது மேலென்றுகிறது.



பலபஞ்சாங்கங்களில் உபாகர்மகாலம் பலவிதமாய்ப் போட்டிருப்பதை விஸ்தாரமாக சென்ற 7-4-32 பிரசுரமான ஆர்யதர்மம் 12-வது சஞ்சிகை 314, 315 பக்கங்களில் காணலாம். மாதம் இரண்டாகியும் பஞ்சாங்க கணிதஜோதிஷர்கள் இதுவரையில் ஷை வித்தியாசங்களுக்கு சமாதானம் சொல்ல முன் வாராதது ப்ராம்மண சமூகத்திற்கேற்பட்டிருக்கிற துரதிருஷ்டம் தான்;

சென்றவார சஞ்சிகையில் ப்ரும்மஸ்ரீ சுப்பிரமண்ய சாஸ்திகளவர்களால் வெளியிடப்பட்டிருக்கிற உபாகர்ம நிர்ணயத்தில் யஜுருபாகர்ம சம்பந்தமான தர்மசாஸ்திர வசனங்களை மட்டிலெடுத்துரைத்து நாளது ஸம்வத்ஸரத்தில் எந்தகாலத்தில்செய்ய வேண்டியது என்று சித்தாந்தப்படுத்தி எழுதாதது குறைவு. வாக்யபஞ்சாங்கங்களாகிய 28-நெ. பஞ்சாங்கம் (28-நெ. என்ன?) மருத்துவக்குடி பஞ்சாங்கம் இவையிரண்டிலும் ஆடிமீ 2உயில் யஜுருபாகர்மகாலம் என்றும் பாலசுப்ரமண்ய சாஸ்திரிகள் பஞ்சாங்கத்தில் போதாயன யஜுருபாகர்மா மட்டில் ஷை ஆடிமீ 2யில் நடத்த வேண்டியதாயும் புதுக்கோட்டை பஞ்சாங்கத்தில் போதாயன யஜுர் ப்ரதம உபாகர்மமட்டில்ஷை ஆடி மாதம் 2உ

யில் அனுஷ்டிக்க வேண்டியதாகவும் கண்டிருக்கிறது. வைகாசி மாதம் முடியப் போகிறது. மத்தியில் ஒரு மாதகாலந்தானிருக்கிறது. ஆடி மாதம் 2உக்கு ஒரு தோஷமும் இல்லாவிட்டாலும் ப்ரௌஷ்டபதிக்கு தோஷமிருந்தால் மட்டில் அது பிரயோஜனப்படும். ஆவணி மாதம் 1உக்கு சங்கிரமண தோஷமிருக்கிறது. ப்ரௌஷ்டபதியில் (ஆவணி மாத 30உ) சந்திரக்ரஹணம் எல்லா பஞ்சாங்கரீதியாயும் அர்த்த ராத்திரிக்கு மேலேற்படுவதால் கௌண காலமாகிய ப்ரௌஷ்டபதிக்குத் தோஷமில்லையென்று ஏற்படுகிறது. ப்ரும்மஸ்ரீ சுப்ரமண்ய சாஸ்திரிகளால் விவரிக்கப்பட்டிருக்கிற தர்மசாஸ்திர வசனங்களின்படி பிரதமோகர்மாவானாலும் துவிதீயாதி உபாகர்மாவானாலும் ஆபஸ்தம்பசூத்ரிகள் நாளது ஸம்வத்ஸரத்தில் உபாகார்மாவை அனுஷ்டிக்கவேண்டிய காலம் ஆவணிமாஸம் 30உயென்று தோன்றுகிறது.

ஆபஸ்தம்பயஜுருபாகர்மாவை நாளது வருஷத்தில் கும்பகோணம் ஸ்ரீமடத்துப் பஞ்சாங்கப்படி ஆவணி மாதம் 1உயில் அனுஷ்டிக்கிறதா? அல்லது ஆவணி 30உயில் அனுஷ்டிக்கிறதா? அல்லது ஆடி மாதம் 2யில் அனுஷ்டிக்கிறதா? ப்ரதமோபகர்மாவுக்கும் துவிதீயாதி உபாகர்மாவுக்கும் வித்தியாசம் உண்டா? என்ற ஆசங்கைகளை கூடியசீக்கிரம் நிவர்த்தி செய்து சித்தாந்தப்படுத்தித் தெரிவிக்கும்படி ப்ரும்மஸ்ரீ பத்திராதிபர்களை ஸவிநயம் கேட்டுக்கொள்ளுகிறேன்.

க வே லக்ஷ்மணசாஸ்திரிகள்.

---

# சிறுவருக்கான சிறுகதைக்கொத்து.

## ரிதத்வஜன்

1. ஸூர்யவம்சத்தில் சத்ருஜித் என்றோரரசனிருந்தான். அவனுக்கு ரிதத்வஜன் என்ற பிள்ளை பிறந்தது. அவன் படிப்பில் மிக சூரன். நல்ல பலமுள்ளவன். கல்விக்கேற்ற குணமுள்ளவன். ஒரு நாள் காலவர் என்ற ரிஷி வந்தார். அரசன்



விதிப்படி அவரைப் பூஜித்தான். அவர் அரசனைப் பார்த்துச் சொன்னார். ஓர் ராக்ஷஸன் மகர்ஷிகளது தவத்தைக் கெடுக்கிறான். அவனை எவராலும் கொல்ல முடியாது.

2. நாங்கள் பரமாத்மாவை த்யானம் செய்தோம். அவர் குவலயாச்வம் என்ற குதிரையைக் கொடுத்தார். அதன் மீதேறி உன் மகன் அந்த ராக்ஷஸனைக் கொல்வான் என்றார். ஆதலால் உமது புதல்வனை என்னுடன் அனுப்புமென்றான். சத்ருஜித் மகனை அழைத்தான். பிறரைக் காப்பதே க்ஷத்ரியதர்மம். ஏமாறாதே! அசுரனைக் கொன்று ஜயலக்ஷ்மியுடன் வா! என்றனுப்பினான். குவலயாச்வத்தின் மீதேறி ரிதத்வஜன் ரிஷியைப் பின்தொடர்ந்தான்.

3. அரக்கன் பன்றி வேடம் பூண்டு தபஸிகளைக் கடித்தான். அரசகுமாரன் வில்லை வளைத்து அம்பைப் பூட்டினான். பன்றி ஓடியது. ரிதத்விஜ துறத்தினான். அது வேகமாக ஓடி பாதாளஞ்சென்றது. அரசன் அம்பை அதன்மேல்விட்டான். அரண்மனை ஒன்று அரசன் கண்ணில் பட்டது. ஆனால் அதில் மனுஷ்ய சஞ்சாரமில்லை. அரசன் உள்ளே சென்றான். அழகான கன்யகைப் படுத்திருந்தாள். நீ யார் என்றான்?

4. அவள் சொன்னாள். விச்வாவசு என்ற கந்தர்வன் பெண் நான். மதாலஸை என்று எனக்குப் பெயர். பாதாளகேது என்ற அரக்கன் என்னை இங்கு தூக்கிவந்தான். இது அவனுடைய பட்டணம். அவன் என்னை மணப்பதாக எண்ணியிருக்கிறான். அதை நான் விரும்பவில்லை. ஆகையால் உயிரைவிட உத்தேசித்தேன். கௌரீதேவிஎன்னைத்தடுத்து ஓர்ராஜகுமாரனவனைக்கொல்வான்.

5. அவனே உனக்கு பதி ஆவான் என்றாள். இதனிடையில் பன்றி வேஷத்துடன்வந்த அசுரன் இங்கே வந்தான். அவன் உடலெல்லாம் ரத்தமாயிருந்தது. அவன் உயிரை விட்டான். அவன் மேலிருந்த பாணத்தில் ரிதத்வஜன் என்ற பெயரிருந்தது. அதைக் கண்டு மதாலஸை இவரே கௌரி அளித்த வரம் என்று எண்ணினாள். தன்னை மணக்கும்படி வேண்டினாள்.

**6. அரசன் தந்தை உத்திரவின்றி அவளை மணக்கமாட்டே டன் என்றான். அவன் தனது குலகுருவை நினைத்தான். உடனே தும்புரு அங்குவந்தார். ராஜகுமார! காந்தர்வ விவாஹம் அரசருக் குறியது. தேவ கன்யகை இவள் அம்பாள் உனக்களித்தாள். இவளை மறுக்காதே, மணம் செய்துகொள் என்றார். ரிதத்வஜன் அவளை ஏற்றான். மஹர்ஷிகளிடம் விடைபெற்றான்.**

7. பரோபகாரியான இவளை எல்லோரும் ஆசிர்வதித்தனர். மனைவியுடன் வீட்டிற்கு வந்தான். பெற்றோரை வணங்கினான். அழகிர் சிறந்த இவள் யார் ? என்று தந்தை கேட்டார். உமது மருமகள் என்று நடந்ததைச்சொன்னான். தந்தை சந்தோஷித்தார். நீ பிராமணர்களுக்குச் செய்த தொண்டிற்கு கூலி இது. இல்லையேல் தேவகன்னிகை உனக்குக் கிடைப்பாளா ? என்றார்.

ஈசனளித்த குதிரை உன் போகத்திற்கல்ல. தினந்தோறும் பிராமணர்களைப் பூஜி. அவரடிபணிந்து என்ன வேலைஆகவேண்டுமென்று கேள். ஒரு நிமிஷமும் தாமதிக்காதே ! பிராமணர் காரியத்தைப்பூர்த்திசெய் என்று தந்தை புத்திரனுக்குஉபதேசித்தார். அங்ஙனமே ரிதத்வஜன் குவலயாச்வம் மீதேறி விசாரிப்பான்.

**9. இவன் பாதாளகேதுவைக் கொன்றதால் ராக்ஷசர்களுக்கு வருத்தமுண்டானது. இவனுக்கு தீங்கு செய்ய வழி தேடினர். பதாளகேதுவின் தம்பி தாளகேது. அவன் ஓர் தபஸ்விவேஷம் பூண்டான். ரிதத்வஜனை அழைத்தான். யான் ஜலத்தில் ஓர் யாகம் செய்கிறேன் நான் வருமளவும்நீ இங்கே இரு. உன் கழுத்து நகையைக் கொடு என்றான்.**

**10. ரிதத்வஜன் பிராமண பக்தியால் அப்படியே செய்தான். அசுரன் ஜலத்தில் மூழ்கி அவ்வரசனரண்மனை சென்றான். அரசனளித்த நகையைக் காட்டினான். ரிதத்வஜனை ஓர் அசுரன் கொன்றுவிட்டான் என்றான். உடனே மதாலஸை பிராணனை விட்டாள். அரசன் கதறி அழுதான். இவளுக்கும் பிள்ளைக்கும் பரலோக காரியத்தைச்செய்தான்.**



11. ராக்ஷசன் யாகம் முடிந்தது நீபோ என்றான். ரிதத்வஜன் நகரம் வந்து ராக்ஷசன்மாயையை அறிந்தான். அதனால் மதாலஸை பெற்றாள். ரிதத்வஜனைப் போல் உத்தம குணமுள்ளோர் இன்புறுவார்.

ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா.

---

# வாரவிருத்தாந்தம்.

யார் மூடர்? மே 20 உ லண்டனில் மேயோவைப் போல் ஆகர்லே என்ற மற்றோர் மேதாவி இந்தியமதத்தின் சிறப்பை அறியாது உண்மைக்கு மாறாக பிதற்றி ஓர் நூல் இயற்றியுள்ளார். நவநாகரீகச் சேற்றில் மூழ்கிய ஏனையோரைப் போல் பால்யவிதவைகளைப் பற்றியும் ஆலயஸேவையைப் பற்றியும் ஸதியையும், பஞ்சகவ்யத்தைப் பற்றியும், மாயக்கண்ணீர் வடிக்காமலில்லை. நமது ஸதாசாரங்களைப் பற்றி ஆங்கு சிலர் போற்றினும் அது ஸமுத்திரத்தில் கரைத்த பெருங்காயமாம். உண்மையை உணராத மூடர் பிறரை மூடரென்பது இயற்கையே. நமது பரமாசார்யாள் ,,முருகன்'' எனும் நூலை ஆங்குள்ளோருக்கு அளித்ததுபோல் தக்கப்பிரசாரம் செய்யவேண்டும்.

* * * * *

சாரதாசட்டம் சாகவில்லையோ ? மே 29 நோவாகாலியில் விதிப்படி விவாஹம்செய்ததற்காக மூவர்க்கு சிக்ஷை விதிக்கப்பட்டது. சிதம்பரத்தில் சிவராவ் பான்ஸ்லே என்பவரால் ராமசாமி அய்யங்கார் பேரில் ஷிவிஷயமாக தொடுக்கப்பட்ட கேஸ் விசாரணை நடந்து வருகிறது. இதே போல் மற்றும் சிலவிடங்களிலும் ஷிசட்டம் அமுலுக்கு கொண்டுவரப்படுகிறது. ஆதலால் ஆஸ்திகர் உறங்கக்கூடாது. எழுந்திருந்து ஆங்காங்கு கூட்டம் கூடி ஸ்ரீ கிருஷ்ணமாசாரியாரின் திருத்தத்தை ஆமோதித்தல் வேண்டும்.

**கீர்வாணவாக் பரிபாலினீ.** கல்லடக்குரிச்சியில் மே 26யில் ஷை சபையில் ஓர் விசேஷக் கூட்டம் கூடிற்று. பல பண்டிதர்களும் ஆஸ்திகர்களும் வந்திருந்து கீர்வாணபாஷையின் மேன்மையை விஸ்தாரமாகக் கூறி ஓர் ஸம்ஸ்கிருத புத்தக சாலையையும் ஏற்படுத்தினர். பண்டைய நூல்களை சிதறவிடாது சேர்த்து வைப்பது சிலாக்யமே.

*　　*　　*　　*　　*　　*

**ஸத்விஷயம்.** மே30 திருப்பத்தூரில் ஸி. ஸுப்ரமண்ய சாஸ்திரியாரால் உபந்யஸிக்கப்பட்டு வந்த ஸ்ரீமத்ராமாயண பட்டாபிஷேகம் நடைபெற்றது. உபந்யாஸகர் நன்கு ஸம்மானிக்கப்பட்டனர். இம்மாதம் 12 முதல் மாம்பலத்திலே திருநெல்வேலி ஸ்ரீ லக்ஷ்மீநாராயணசாஸ்திரிகளால் ஸப்தாஹம் உபந்யஸிக்கப்படும்-

**ஸ்ரீவத்ஸ. வே. ஸோமதேவசர்மா.**

---

வாழ்கவந்தணர் வானவ ரானினம்
　வீழ்க தண்புனல் வேந்தனுமோங்குக
ஆள்கதீயதெல் லாமா ஞமமே
　சூழ்க வையகமுந்துயர் தீர்க்கவே.

---

